Regd. No. TN/MS (C) 244 | ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) | Phone: 420212 | 4 பக்கம் விலை 45 காசு



### ஆற்றல்

நம்மிடம் ஆற்றலும் இருக்கிறது. நீண்ட ஆயுளும் இருக்கிறது. நல்ல நம்பிக்கையுடன் நாம் நடைபோட்டால் அந்த உண்மைப் பாதையில் வெற்றி பெற முடியும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

### பேதங்கள்

சமுதாயத்தில் மலிந்துள்ள மூட நம்பிக்கைகள் உயர்வு தாழ்வு என்று கற்பிக்கும் பேதங்கள் ஒழிக்கப்பட வேண்டும்.

-தந்தை பெரியார்



மலர்: 7 | சென்னை 24 - 11 - 82 புதன் | வெளியூர் 25 - 11 - 82 வியாழன் | இதழ்: 38

## பெண்களை கேலி செய்த 8 பேருக்கு அபராதம்

சென்னை, நவ. 24— சென்னை மாதவரம் நெடுஞ்சாலையில் ஒரு பெண்கள் ஸ்கூல் முன்பு பெண்களை 8 பேர் கேலி செய்தனர்.

இவர்கள் லவ் மீபெல்ட் அணிந்து கேலி செய்தனராம்.

பெண்களை கேலி செய்த பார்த்தசாரதி உட்பட 8 பேர்களை போலீசார் கைதுசெய்தனர்.

இவர்களுக்கு எழும்பூர் 14-வது கோர்ட்டில் தலா ரூ. 70 அபராதம் விதிக்கப்பட்டது.

## கோவாவில் பிரதமர் இந்திரா

பனாஜி, நவ. 24— கோவாவில் ஒருநாள் தங்குவதற்காக பிரதமர் இந்திராகாந்தி இன்று (24-ந் தேதி) காலை விசேஷ விமானம் மூலம் இங்கு வந்தார்.

விமான நிலையத்தில் மாநில கவர்னர் ஏர். மார்ஷல் லத்திப், முதலமைச்சர் பிரதாப்சிங்ரானே, கோவா மாநில இந்திரா காங்கிரஸ் தலைவர் திருமதி சுலோச்சனா சித்தார் ஆகியோரும் மற்றும் ஏராளமானோரும் பிரதமர் இந்திராவை வரவேற்றனர்.

### உடற்பயிற்சியில் வெற்றிபெற்ற

# கொரியா - சீனநாட்டு பெண்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பரிசு

### மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம்

புதுடெல்லி, நவ. 24- ஆசிய விளையாட்டுப் போட்டியில் பெண்கள் விளையாட்டுப் போட்டியில் கலந்துகொண்டு வெற்றி பெற்ற கொரியா, சீனா நாட்டு வீராங்கனைகளுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பதக்கங்களை வழங்கினார். அப்போது மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்

டெல்லியில் நடைபெறும் ஆசிய விளையாட்டுப் போட்டியில் தனி நபர்களுக்கான உடற் பயிற்சியில் ஆண், பெண்கள் கலந்துகொண்டனர். இப்போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பதக்கங்களை வழங்கினார்.

#### இசைக்கேற்ப உடல் பயிற்சி

ஆசிய விளையாட்டுப் போட்டியை முதல்வர் புரட்சித்தலைவர் பார்த்தார். இந்திர பிரஸ்தா உள் விளையாட்டு அரங்கத்துக்குமுதல்வர் புரட்சித் தலைவர்சென்றிருந்தார், அங்கு உடல் பயிற்சிப் போட்டிகளை பார்த்தார்.

தனிநபர்களுக்கான உடல் பயிற்சி போட்டியில் கலந்து கொள்பவர்கள் மேடைக்கு வந்ததும் ஒருநிமிடம்முதல்ஒன்றரை நிமிடம் வரை இசை எழுப்பப்படும். அதற்கு ஏற்றபடி அவர்கள் உடல் பயிற்சிகளை செய்து காட்டவேண்டும்.

இதன்படி பல்வேறு வகையான போட்டிகளில் ஆண்களும், பெண்களும் கலந்துகொண்டு தங்கள் திறமையை காட்டினார்கள்.

தனி நபர்களுக்கான பெண்கள் உடல் பயிற்சி போட்டியில் கொரியாவைச் சேர்ந்த பெண்ணுக்கு முதல் பரிசு தங்கப் பதக்கம் கிடைத்தது.



#### வெண்கல வெள்ளி பதக்கம் சீனத்துக்கே

2-வது பரிசு வெள்ளி பதக்கத்தையும் 3-வது பரிசு வெண்கலப் பதக்கத்தையும் சீனப்பெண்கள் பெற்றனர்.

முதல்வர் புரட்சித் தலைவரை இந்திய உடல் பயிற்சி சங்கத் தலைவர் ஓசா அழைத்துச்சென்று, அவர்களுக்கு பரிசளிக்குமாறு கேட்டுக் கொண்டார்.

அதன்படி முதல்வர் புரட்சித்தலைவர் சென்று அந்தப் பெண்களுக்கு பதக்கங்களை அணிவித்து கை குலுக்கினார்.

அப்போது கூட்டத்தினர் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

பதங்கங்களை குவித்த சீனப் பெண்கள்



## ஜப்பான் பிரதமர் தேர்வு

டோக்யோ, நவ. 24— ஜப்பான் பிரதமர் பதவிக்கு யாசுஇரோ நாகாசோனே, லிபரல் ஜனநாயக கட்சியால் தேர்தெடுக்கப்பட்டுள்ளார்.

64 வயதான நாகாசோனே, அவரது கட்சித் தேர்தலில் மற்ற வேட்பாளர்களை விட அதிக வாக்குகள் பெற்றார்.

ஆசியபோட்டி.பார் விளையாட்டுகளில் அற்புத சாதனைகள் புரிந்த சீன பார் விளையாட்டு அணியினரை பிரதமர் இந்திராகாந்தி பாராட்டினார்.

# தமிழக வறட்சி நிவாரண பணிகளுக்கு அதிக உதவி தருக



### மத்திய அமைச்சரிடம் முதல்வர் புரட்சித்தலைவர் நேரில் வற்புறுத்தல்

புதுடெல்லி, நவ. 24- தமிழகத்தில் பருவமழை தவறியதன் காரணமாக ஏற்பட்டுள்ள வறட்சியைச் சமாளிக்க மத்திய அரசு அதிக உதவிகளைத் தரவேண்டும் என்று மத்திய அமைச்சர் ராவ்பீரேந்திர சிங்கிடம் முதல்வர் புரட்சித்தலைவர் வற்புறுத்தினார்.

ஆசிய விளையாட்டுப் போட்டியைக்காண டெல்லி சென்ற முதல்வர் புரட்சித்தலைவர் இன்று காலை மத்தியவிவசாயத் துறை அமைச்சர் ராவ் பீரேந்திரசிங்கைச் சந்தித்து இருபது நிமிட நேரம் பேசினார்.

தமிழகத்தில் பருவமழை தவறியதால் ஏற்பட்டுள்ள வறட்சி நிலவரம் பற்றி மத்திய அமைச்சரிடம் முதல்வர் புரட்சித்தலைவர் விளக்கிக் கூறினார்.

தமிழக அரசு மேற்கொண்டுள்ள வறட்சி நிவாரணப்பணிகள் குறித்தும் முதல்வர் புரட்சித் தலைவர், மத்திய அமைச்சரிடம் விவரித்தார்.

#### கூடுதல் அரிசி

போதிய மழை பெய்யவில்லை என்றும், மழையை எதிர்பார்த்திருப்பதாகவும் முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

வறட்சி நிவாரணப் பணிகளை முன்னிட்டு தமிழகத்துக்கு அரிசி, கோதுமை, பாமாயில் போன்றவற்றை அதிக அளவில் ஒதுக்க வேண்டும்என்று முதல்வர் புரட்சித்தலைவர் வற்புறுத்தினார்.

#### சிவசங்கர் சந்திப்பு

மத்திய மின்சாரம் மற்றும் எரிபொருள் துறை அமைச்சர் சிவசங்கரையும் முதல்வர் புரட்சித் தலைவர் இன்று காலை சந்திததுப் பேசினார்.

அரை மணி நேரம் நடந்த இந்தச் சந்திப்பின் போது தமிழக மின் திட்டங்கள் பற்றி முதல்வர் புரட்சித தலைவர் விளக்கினார்.

தமிழக மின் திட்டங்களுக்கு விரைவில் அனுமதி தரவேண்டும் என்று முதல்வர் புரட்சித் தலைவர்வற்புறுத்தினார்.

(4-ம் பத்தி பார்க்க)

(7-ம் பத்தி தொடர்ச்சி)

தமிழகத்துக்கு அதிக அளவு நிலக்கரி கொடுக்க வேண்டும் என்ற கோரிக்கையையும் முதல்வர் புரட்சித்தலைவர் எடுத்து வைத்தார்.

இந்தச் சந்திப்புக்களின் போது தமிழக மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், தமிழக அரசின் சிறப்புப் பிரதிநிதி மோகனரங்கம் ஆகியோர் உடனிருந்தனர்.

## ஸ்கூட்டர் விபத்து: இருவர் மரணம்

சென்னை, நவ. 24— அம்பத்தூர் தொழிற்பேட்டை அருகே நேற்று நடந்த ஒரு விபத்தில் இருவர் பரிதாபகரமாக மரணம் அடைந்தனர்.

கோயம்பேட்டைச் சேர்ந்த ரவீந்திரன், பல்லாவரத்தைச் சேர்ந்த அஜ்மல் இருவரும் திருவள்ளூரில் பணியாற்றுகிறார்கள்.

நேற்று இருவரும் ஒரு ஸ்கூட்டரில் அம்பத்தூர் தொழிற்பேட்டை அருகே வந்தபோது ஒரு எண்ணெய்லாரிமோதியது.

ரவீந்திரன் அந்த இடத்திலேயே மரணம் அடைந்தார், அஜ்மல் மருத்துவமனைக்கு செல்லும் வழியில் இறந்தார்.

## புலித்தேவன் பதில்கள்

கேள்வி:
சிறப்புக் கூட்டம் நடத்தினால் நிதி கிடைக்குமே; கருணாநிதி ஏன் நிறுத்தி விட்டார்?

பதில்:
நீர் எந்த யுகத்தில் இருக்கிறீர். கருணாநிதி பேச்சைக் காசு கொடுத்துக் கேட்ட காலம் மலையேறி விட்டது. இப்போது காசு கொடுத்துக் கூட்டம் சேர்ப்பதாகக் கேள்வி.

கேள்வி:
தி. மு. க. வரலாற்றைக் கருணாநிதி எழுதினால்?

பதில்:
அதில் அண்ணாவின் பெயர் இடம் பெறுமா என்பது சந்தேகம்.

கேள்வி:
திருச்செந்தூர் நெடிய பயணத்தில் வெயிலில் நடந்தபோது கருணாநிதி என்ன நினைத்திருப்பார்?

பதில்:
என்னதான் நடித்தாலும் நாடகம் எடுபடவில்லையே என்று ஏங்கி இருப்பார்.

கேள்வி:
மூடநம்பிக்கைகளை எதிர்க்கும் கருணாநிதியை ஒரு வாரப்பத்திரிக்கை ஆசிரியர் தாக்குவதேன்?

பதில்:
கருணாநிதி எங்கே மூடநம்பிக்கைகளை எதிர்க்கிறார்? எதிர்ப்பது போல் நடிக்கிறார். 'அங்காளம்மனுக்கு கண்சாத்தியது' மூட நம்பிக்கையை எதிர்ப்பதாகுமோ?

கேள்வி
கருணாநிதி முதலமைச்சராக இருந்தபோதைவிட இப்போது நல்ல திட்டங்கள் நிறைவேற்றப்படுவதை சிலர் உணர மறுப்பதேன்?

பதில்:
குருடனிடம் ராஜ விழியை எதிர்பார்ப்பது உங்கள் குற்றம்.

கேள்வி:
தமிழக மின் ஊழியர்கள் போனஸ் பிரச்சினையில் தாண்டிக் குதித்த கருணாநிதி புதுவை மின் ஊழியர் பிரச்சினையில் வாய் திறவாததேன்?

பதில்:
வாய் திறந்தால் — புதுவை அரசு வாயைப் பிளந்து விடும்.

கேள்வி:
தி. மு. க. வின் இன்றைய நிலை என்ன?

பதில்
வெயிலில் வீசப்பட்ட ஐஸ்கட்டி.

கேள்வி:
சென்னை மாவட்ட தி. மு. க. செயலாளர் தேர்தலில் சீதாபதி தோற்று விட்டாரே?

பதில்:
அவர்கள் பாணியில் கூறினால், "பொறுத்திருந்து பாருங்கள்!

## பதக்க பட்டியல் விவரம்

| | தங்கம | வெள்ளி | வெண்கலம் | மொத்தம் |
|---|---|---|---|---|
| சீனா | 17 | 15 | 11 | 43 |
| ஜப்பான் | 16 | 12 | 8 | 36 |
| வடகொரியா | 5 | 9 | 6 | 20 |
| தென் கொரியா | 5 | 6 | 7 | 18 |
| இந்தியா | 2 | 3 | 1 | 6 |
| பிலிப்பைன்ஸ் | 1 | 1 | 3 | 5 |
| இந்தோனேஷியா | 0 | 1 | 2 | 3 |
| ஈரான் | 0 | 0 | 1 | 1 |

போனஸ் கோரி போராட்டம்:

# பாண்டிச்சேரியில் மில் ஊழியர்கள் சாரி சாரியாக கைது

**பாண்டிச்சேரி, நவ. 24- பாண்டிச்சேரியில் போனஸ் கோரி போராட்டத்தில் ஈடுபட்டுள்ள மில் தொழிலாளர்களை தி.மு.க. ஆட்சியினர் சாரி சாரியாக கைது செய்தனர்.**

பாண்டிச்சேரியில் உள்ள ஆங்கிலோ பிரெஞ்ச் நெசவாலையில் போனஸ்கோரி 6 ஆயிரத்திற்கும் மேற்பட்டவர்கள் கடந்த 14 நாட்களாக வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டு வருவதுதெரிந்ததே.

ஆனாலும் தி.மு.க. முதலமைச்சரான டி. ராமச்சந்திரன் தொழிலாளர்களின் போனஸ் பிரச்சினையை தீர்க்க உருப்படியான எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை எனக்கூறப்படுகிறது.

இதை அடுத்து தொழிலாளர்கள் தங்கள் போராட்டத்தை தீவிரப்படுத்தியுள்ளனர்.

## போராட்டம் வலுக்கிறது

புதுவை சட்டசபைக் கட்டிடம் முன்பு தொழிலாளர்கள் மறியல் போராட்டம் நடத்துகிறார்கள்.

இதையடுத்து மறியல் போராட்டத்தில் ஈடுபட்ட தொழிலாளர்கள் சாரி சாரியாக கைது செய்யப்பட்டனர்.

கைதானவர்கள் எண்ணிக்கை நூற்றுக் கணக்கில் இருக்கும் என தொழிலாளர் தலைவர்கள் கூறினார்கள்.

எங்கள் கோரிக்கை நிறைவேறும் வரை போராட்டம் தொடரும் என தொழிலாளர்கள் அறிவித்துள்ளனர்.

ஓமியோபதி கல்லூரி:
பேரவைத் தேர்தலில்

# கழக மாணவர் வெற்றி

திருமங்கலம், நவ. 24- அரசினர் ஓமியோபதி மருத்துவக் கல்லூரியில் நடந்த மாணவர் பேரவைத் தேர்தலில் கழக மாணவர்கள் வெற்றி பெற்றனர்.

வெற்றி பெற்றோர் விவரம் வருமாறு:—

பி. அருணாசலம் (தலைவர்) ஆர். ராதா (செயலாளர்) எம். சத்தியமூர்த்தி (இணைச் செயலாளர்) சந்தோஷராஜ் (தமிழ்மன்ற செயலாளர்) ஆர். தியாகராஜன் (மலர் பதிவாளர்)

வெற்றி பெற்ற மாணவர்கள் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டனர். ஊர்வலத்தில் தொகுதி மாணவர் அமைப்பாளர் அ. கன்னையாவும் பங்கேற்றார்.

புரட்சித்தலைவரின் ஆட்சியில்

# ஆதிதிராவிடர்கள் நல்வாழ்வுக்கு புதிய திட்டம்

## ரூ. 9 கோடியில் செயல்படுத்தப்படும் அமைச்சர் விஜயசாரதி தகவல்

**தூத்துக்குடி, நவ 24—வறுமைக் கோட்டிற்குக் கீழே இருக்கும் ஆதிதிராவிட மக்களது வாழ்க்கைத் தரத்தை உயர்த்த ரூ. 9 கோடி செலவில் பெருந்திட்டம் ஒன்று முதல்வர் புரட்சித்தலைவரது ஆட்சியில் செயல்படுத்தப்பட உள்ளது.**

அமைச்சர் விஜயசாரதி இதுபற்றிய விவரங்களைக் கூறினார்.

அமைச்சர் விஜயசாரதி கூறியதாவது:

ஆதிதிராவிட மக்கள் மிகப் பின்னடைந்து வறுமையில் சிக்கித் தவிக்கும் மக்களது வாழ்க்கைத் தரத்தை உயர்த்த கழக ஆட்சியில் பெருந்திட்டம் ஒன்று தீட்டப்பட்டுள்ளது.

வறுமைக் கோட்டுக்குக் கீழேஉள்ள ஆயிரம் ஏழை ஆதிதிராவிட குடும்பங்களுக்கு இந்த திட்டம் முதலில அமல்படுத்தப்படும்.

15 பிளாக்குகளில் இந்த திட்டம் அமல்படுத்தப்படும். ஒவ்வொரு பிளாக்கும் ஒவ்வொரு மாவட்டத்தில் இருந்து தேர்ந்தெடுக்கப்படும்.

ஒவ்வொரு பிளாக்கிற்கும் ரூ. 50 லட்சம் முதல் ரூ. 60 லட்சம் வரை இந்த திட்டத்தின் அடிப்படையில் செலவிடப்படும்.

இந்த திட்டத்தின் மூலம் பல வசதிகள் செய்து தரப்படும்.

இணைப்புச் சாலைகள் பள்ளிக் கட்டிடங்கள், தெரு விளக்குகள், சுகாதார வசதியுடன் வீட்டு வசதிகள் ஏற்படுத்தித் தரப்படும்.

அதோடு வேலை வாய்ப்புக்கும் இந்த திட்டத்தின் மூலம் வகை செய்யப்படும். கிராமப்புறங்களில் நெசவாலைகள் அமைக்கப்படும், மரவேலைகள், இரும்பு சம்பந்தப்பட்ட வேலைகளும் மேற்கொள்ளப்படும்.

இந்தத் திட்டத்தை தமிழ்நாடு ஆதிதிராவிட வீட்டு அபிவிருத்தி வாரியம் செயல்படுத்தும்.

இந்த திட்டத்தை செயல்படுத்தும் வேலையில் இந்த வாரியம் ஏற்கனவே வேலையைத் துவக்கிவிட்டது.

ஐந்து வங்கிகளுடன் இதற்கான ஒப்பந்தங்களை செய்துள்ளது.

இவ்வாறு அமைச்சர் விஜயசாரதி கூறினார்.

தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சித்துறை சார்பில்

# புதுடெல்லியில் சுற்றுலாத்துறை அலுவலகம்

## பாலசுப்ரமணியம் தகவல்

**தஞ்சாவூர், நவ. 24. தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் அலுவலகம் ஒன்று புதுடெல்லியில் விரைவில் திறக்கப்படும் என்று அதன் தலைவர் கே.பாலசுப்பிரமணியம் கூறினார்.**

தஞ்சாவூரில் நிருபர்களிடம் பாலசுப்பிரமணியம் கூறியதாவது:-

தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் தலைநகர் புதுடெல்லியில் ஒரு அலுவலகத்தை திறக்க உத்தேசித்துள்ளது.

எல்லா மாநிலங்களின் சுற்றுலா அலுவலகங்களும் ஒரே இடத்தில் சேர்ந்து இருக்க வேண்டும் என்ற ஒரு கருத்து இருந்து வருகிறது.

சுற்றுலாத்துறையை எப்படி வளர்த்து வருகிறார்கள் என்பதைக் கண்டறிய நான் அரியானா, ராஜஸ்தான், பஞ்சாப், காஷ்மீர், உத்திரபபிரதேசம் ஆகிய மாநிலங்களுக்குச் சென்று இருந்தேன்.

அவர்களுடன் சுற்றுலா வளர்ச்சிப் பற்றி விவாதம் நடத்தினேன்.

## மற்றவர்களை கவரும் தமிழக திட்டம்

தமிழ் நாட்டில் மேலும் இரண்டு இடங்களில் யூத் ஹாஸ்டல் ஒன்று கிருஷ்ணகிரியிலும், மற்றொன்றுஒகனேக்கல்லிலும் அடுத்த மாதம் திறக்கப்பட இருக்கிறது.

தமிழகத்தில் கட்டப்படும் யூத்ஹாஸ்டல்கள் வடநாட்டினரை மிகவும் கவர்ந்துள்ளது.

குறிப்பாக அரியானா, ராஜஸ்தான் மாநிலங்கள் தங்கள் மாநிலத்தில் இப்படிப்பட்ட ஹாஸ்டல்களைக் கட்ட ஆர்வம் கொண்டுள்ளன.

தமிழகமும், ராஜஸ்தானும் சுற்றுலாத் துறை ஊழியர்களை பரிவர்த்தனை செய்து கொள்ளும்.

இவ்வாறு பாலசுப்பிரமணியம் நிருபர்களிடம் கூறினார்.

சத்துணவுத்திட்டம்:

# அமைச்சர் கே.ஏ.கே.யிடம் நன்கொடை

சென்னை, நவ. 24— தமிழக ஊரக தொழிலமைச்சர் கே. ஏ. கே. திருச்சி மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்த போது பல்வேறு நிறுவனங்கள் சார்பில் முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு திட்டத்திற்காக 654 ரூபாய் நன்கொடையாக அளிக்கப்பட்டது.

# வானொலியில் காசிராஜன் பேசுகிறார்

சென்னை, நவ, 24— தமிழக செய்தி மக்கள் தொடர்புத்துறை இயக்குநர் காசிராஜன் இம்மாதம் 26—ந் தேதி 27ந்தேதி 28ந் தேதிகளில் திரு.வி.க. வின் சிந்தனைகள் என்ற தலைப்பில் சென்னை வானொலியில் பேசுகிறார்.

இந்த உரைகுறிப்பிட்ட தேதிகளில் காலை 6.05 மணிக்குஒலிபரப்பப்படும்.

1 ஆசிய விளையாட்டில் நீச்சல் போட்டி (200 மீட்டர்)யில் வெற்றிபெற்ற வீராங்கனைகள்.

ஹிராகா— ஜப்பான் — தங்கம்

சுங்கிம். வடகொரியா. வெள்ளி

லியாங். சீனா. வெண்கலம்.

2 பளு தூக்கும் போட்டியில் தங்கப் பதக்கத்தைத் தட்டிச் சென்ற வடகொரியா வீரர் ஹோபாங்சால்.

மானாமதுரை-பரமக்குடி

# ஆஸ்பத்திரிகளில் அமைச்சர் அண்டே திடீர் சோதனை

**மதுரை, நவ. 24- மானாமதுரை பரமக்குடி ஆஸ்பத்திரிகளில் அமைச்சர் அண்டே திடீர் சோதனை நடத்தினார்.**

மானாமதுரை, பரமக்குடி ஆகிய இடங்களில் உள்ள அரசு மருத்துவமனைகளில் அமைச்சர் அண்டே திடீர்சோதனை நடத்தினார்.

மானாமதுரை ஆஸ்பத்திரியில் குறிப்பிட்ட நேரத்திற்கு வராத ஆண் உதவி செவிலியர் மீதுநடவடிக்கை எடுக்கும் படி மருத்துவ அதிகாரிக்கு அமைச்சர் அண்டே உத்தரவிட்டார்.

பரமக்குடிஆஸ்பத்திரியில் அமைச்சர் அண்டே நோயாளிகளிடம் அங்குள்ள வசதிகள் குறித்து கேட்டறிந்தார்.

ஒவ்வொரு வாரமும் ஆஸ்பத்திரிகளுக்கு சென்று சோதனை நடத்தலாம் என மாவட்ட மருத்துவ அதிகாரியிடம் அமைச்சர் அண்டே தெரிவித்தார்.

அமைச்சர் அண்டேயுடன். பொ. அன்பழகன் எம். பி., தவசிஎம்.எல்.ஏ. கவுன்சிலர் இளவரசன் ஆகியோர் உடன் சென்றனர்.

# வங்கக்கடலில் காற்றழுத்த மண்டலம்: மீண்டும்மழைவருகிறது

**சென்னை, நவ 24. வங்கக் கடலில் மீண்டும் ஒரு குறைந்த காற்றழுத்த மண்டலம் உருவாகியுள்ளது. இதன் காரணமாக தமிழகத்தில் பருவமழை தொடர வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.**

காற்றழுத்த மண்டலம் காரணமாக தமிழகத்தில் சில இடங்களில் நேற்று மழை பெய்துள்ளது.

வங்கக்கடலில் இலங்கை அருகே ஒரு குறைந்த காற்றழுத்த மண்டலம் உருவாகி உள்ளதாக வானிலைஆராய்ச்சி நிலையம் அறிவித்துள்ளது.

இதன்காரணமாக வடகிழக்கு பருவ மழை மீண்டும் தொடர வாய்ப்புஏற்பட்டுள்ளது.

வங்கக் கடல் காற்றழுத்த மண்டலத்தால் நேற்று கடற்கரை ஓரப் பகுதிகளில் மழை பெய்துள்ளது.

## பரவலாக மழை

தஞ்சை, தென்ஆற்காடு முகவை மாவட்டங்களில் நேற்று பரவலாக மழை பெய்துள்ளது.

நாகப்பட்டினம், பரங்கிப் பேட்டையில் தலா 3 செண்டி மீட்டரும், கடலூர், புதுவை, மயிலாடுதுறையில் தலா 2 செண்டி மீட்டரும் நேற்று மழைபெய்தது.

# சின்ன சேலத்தில் கூட்டுறவு வார விழா

சேலம், நவ. 24— சின்ன சேலம் வட்டாரத்திலுள்ள 12 கூட்டுறவு ஸ்தாபனங்கள் இணைந்து கடந்த 19ந் தேதி சின்ன சேலம் காந்தி பொது மேடையில் 29.வது அனைத்திந்தியக் கூட்டுறவு வார விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடினர்.

கூட்டுறவு வார விழாவினையொட்டி பள்ளி மாணவ, மாணவியர்களுக்கிடையேயான பேச்சுப் போட்டி, வினாடி வினா ஆகிய நிகழ்ச்சிகளும் நடைபெற உள்ளன.

சேரன்போக்குவரத்துகழக

# அண்ணா நிர்வாக பணியாளர் சங்க செயற்குழு

கோயமுத்தூர், நவ. 24- சேரன் போக்குவரத்துக் கழக அண்ணா நிர்வாகப் பணியாளர்கள் செயற்குழு கூட்டம் மாநகராட்சி பஸ் நிலையத்தில் சங்க பொதுச் செயலாளர் ந. சுப்பிரமணியன் தலைமையிலும், செயலாளர் கே. ஆர். நடராசன் முன்னிலையிலும் நடைபெற்றது.

கூட்டத்தில் சிறப்பு அழைப்பாளராக யு. ஆர். கிருஷ்ணன் கலந்து கொண்டார்.

கூட்டத்தில் தொழிற்சங்கத்தின் கோரிக்கைகளுக்குஏற்ப 8.33 சதவீத போனசும் கூடுதல் தொகைரூ. 350ம், போக்குவரத்து ஊழியர்களுக்கு 3-வது ஊதிய இந்தஆண்டு முதல் கொடுக்கவும் அறிவிப்புச் செய்துள்ள முதல்வர் புரட்சித் தலைவர், அமைச்சர் முத்துசாமி ஆகியோருக்கு நன்றி தெரிவித்து தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இறுதியில் சங்கத் தலைவர் எஸ். முத்துசாமி நன்றி கூறினார்.

# 'வீராணம் திட்டம் நடைமுறைக்கு சாத்தியமல்ல'

## ஆதாரத்துடன் அதிகாரி விளக்கம்

**சென்னை, நவ. 24- வீராணம் திட்டம் நடைமுறை சாத்தியமற்றத் திட்டமாகும் என ஆதாரத்துடன் அதிகாரி ஒருவர் விளக்கியுள்ளார்.**

கருணாநிதி முதலமைச்சராக இருந்த காலத்தில் போடப்பட்டதுவீராணம் திட்டமாகும்.

கோடிக் கணக்கான ரூபாய் செலவிடப்பட்ட பிறகு இத்திட்டம் கைவிடப்பட்டது.

சென்னை நகருக்கு தற்போது 15 டி. எம். சி. தண்ணீரை கிருஷ்ணா நதியில் இருந்து பெற விரைவில் ஆந்திரா தமிழகம் இடையே ஒப்பந்தம் நடைபெற உள்ளது.

இத்திட்டம் நிறைவேற 7 ஆண்டுக்காலம் ஆகலாம் எனக் கருதப்படுகிறது.

இதற்கு இடைக்காலத்தில், வீராணம் திட்டத்தை நிறைவேற்றினால் விரைவில் சென்னைக்கு கூடுதல் தண்ணீர் சப்ளை கிடைக்கலாம் என சிலர் கருத்து தெரிவித்திருந்தனர்.

வீராணம் திட்டம் எவ்வாறு நடைமுறை சாத்தியமற்றது என்பது குறித்து ஒரு அதிகாரி தெரிவித்துள்ளதாவது:-

வீராணம் திட்டத்தில் அப்போது கான்கிரீட் பைப்புகள் போடப்பட்டன.

இதை புதிதாக நிறைவேற்ற வேண்டுமானால் இரும்புக் குழாய்களை போட வேண்டும் இதற்கு ஏராளமாக செலவாகும்.

அதோடு கிருஷ்ண ஆற்று நீரைப் போல சென்னைக்கு இத்தண்ணீர் தானாக வந்து சேராது. இரண்டு 3இடங்களில் என்ஜின்கள் மூலம் தண்ணீரை மேலே இறைத்து அனுப்ப வேண்டும்.

அதோடு, வீராணத்தில் இருந்து சென்னைக்கு 2.5 டி. எம். சி. தண்ணீர் தான் கிடைக்கக்கூடும்.

தற்போது போடப்பட்டுள்ள குழாய்கள் மூலம் விழுப்புரத்திற்கு குடிநீர் சப்ளை செய்வதும் தேவையற்றது ஆகும்.

## வீராணம் திட்டம் சாத்தியமற்றது

விழுப்புரத்திற்கு அருகில் உள்ள பெண்ணாற்றில் இருந்து தண்ணீர் சப்ளை செய்வதே சிக்கனமாகும்.

மீண்டும் வீராணம் திட்டத்தை நிறைவேற்ற 7 ஆண்டுக்காலம் ஆகக் கூடும்

ஆகவே பொருளாதார ரீதியிலும் மற்ற எல்லா வகையில், வீராணம் திட்டம் நடைமுறை சாத்தியமற்றது ஆகும்.

இவ்வாறு அந்த அதிகாரி கூறினார்.

முதல்வர் தலைமையில்

# தாய் அலுவலர் ராஜேந்திரன் திருமணம்

சென்னை, நவ. 24. தாய் வார இதழில் பணியாற்றும் ஜே. ராஜேந்திரன் திருமணம் இம்மாதம் 26-ம் தேதி காலை 7-30 மணிக்கு நடைபெறுகிறது.

முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் நடைபெறும் இந்த திருமணம் சென்னை 24-பவர்ஹவுசில்உள்ள மாநகராட்சி சமூகக் கூடத்தில் நடைபெறுகிறது.

மணமகள் ஊட்டி என். நாகராஜனின் மகள்வசந்தி. மணமகன் ராஜேந்திரன் 111-வது வட்டக் கழக உறுப்பினர் என். கே. ஜெகந்நாதனின் மகன்.

டாக்டர் நாவலர் பொதுச்செயலாளர் ப. உ. ச. அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் மற்றும் அமைச்சர் பெருமக்கள் கழக தலைவர்கள் வாழ்த்துரை வழங்குகின்றனர்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029. Editor: E. PARASURAMAN.

# கருணாநிதி வீட்டுத் தேர்தல்

கருணாநிதி கட்சியின் சென்னை மாவட்டக் கழகத் தேர்தல் நடந்து முடிந்திருக்கிறது.

கடுமையான மோதலுக்கிடையே கருணாநிதிக்கு மிகவும் நெருக்கமான ஒருவர் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டிருக்கிறார்.

ஒரு கட்சியில் அமைப்புகளுக்கு தேர்தல்கள் வருகிறபோது அந்தக்கட்சியின் தலைவர், இருதரப் பிற்கும் பொதுவாக இருக்க வேண்டும்.

அண்ணா அவர்கள் ஒவ்வொரு தேர்தலிலும் அப்படித்தான் நடந்துகொண்டார்கள்.

புரட்சித்தலைவர் அவர்கள் கழகத்தின் அமைப்புத் தேர்தலின்போது அந்த நடுநிலை நோக்கோடு தான் நடந்துகொண்டார்கள்.

''போட்டியிடும் இருதரப்பினரும் நான் போற்றத்தக்க உடன்பிறப்புகள் தான்— யாருக்கும் ஆதரவாகவோ, எதிராகவோ நானோ, இயக்க முன்னணியினரோ இல்லை'' என்று ஆணித்தரமாக அறிக்கை விடுத்தார்கள்.

ஆனால், கருணாநிதி கட்சியின் சென்னை மாவட்டத் தேர்தல் நடந்து முடிந்த கதையே கைகொட்டிச் சிரிக்க வைப்பதும், கண்ணியமறிந்தோர் கண்டிக்கத்தக்கதுமாக அமைந்திருக்கிறது.

இயந்திரம் போலச் சுற்றி இரவு — பகலாக உழைத்து இருநூற்றி மூன்று கிலோ வெள்ளிக்கட்டிகளைக் கருணாநிதியிடம் தந்தவர் என்று அவரால் புகழப்பட்ட ஆர். டி. சீதாபதி போட்டியிடுகிறார்.

**அவரை எதிர்த்து கருணாநிதியின் இரண்டு வீட்டுப் 'பினாமிப்' பிள்ளையான பாலு போட்டியிடுகிறார்.**

தயாளமனதோடு பல்லாவரத்தில் தியேட்டரையும், தர்மசிந்தனையோடு படவிநியோக வ்யாபாரத்தையும் கவனித்து வரக்கூடிய பாலு போட்டியிடுகிறபோது இரண்டு குடும்பங்களும், இரண்டு குடும்பத் தலைவரான கருணாநிதியும் வரிந்து கட்டிக் கொண்டு வேலை செய்துதானே தீரவேண்டும்?

கருணாநிதி வீட்டுப்பிள்ளைகள் வெளிப்படையாகவே கச்சை கட்டிக் கொண்டு இறங்கிக் களத்திற்கு வந்து விட்டார்கள்.

**'கடத்தல்' வேலையில் வெளிநாட்டுப் பரிச்சயமே இருக்கும்போது வெளியூர்களுக்கு ஆட்களைக் கடத்திப் போகவா, தெரியாது!**

தாம்பரத்திற்கு மேற்கே ஒரு கிராமத்தில் கடைசி நேர அடைப்பு வேலை!

ஓட்டுப் போட வேண்டிய உடன்பிறப்புகள் மத்திய பிரதேசத்துக்குக் கொண்டு செல்லப்பட்ட கொத்தடிமைகள் போல அங்கே உட்கார்ந்திருக்கிறார்கள்.

கருணாநிதியின் தூதுவராக வந்த காட்பாடிப் பையன் கண்ணீர் மல்க பேசியிருக்கிறார்.

**''தலைவர் கண்ணீர் விட்டபடி இருக்கிறார்'' அவருக்கு இது மானப்பிரச்னை! சீதாபதி நம் தலைவரை மதிக்க மறுக்கிறார்.**

-: திருவை அண்ணாமலை :-

**சீதாபதியின் திமிரை அடக்கியாக வேண்டும். இது தலைவரின் ஆணை'' என்று பேசி ஒரு கடிதத்தையும் படிககிறார்.**

சீதாபதியின் தயவால் தேர்ந்தெடுக்கப்பட்ட இரண்டு பகுதிச் செயலாளர்களைக் கருணாநிதி நேரடியாக அழைக்கிறார்.

**இரண்டு பகுதிச் செயலாளர்களின் கைகளையும் பிடித்துக் கொண்டு கெஞ்சுகிறார்- கண்ணீர் மல்கச் சொல்கிறார்- ''இந்தப் பிரச்சினையில் எனக்குப் பெரிய சங்கடம்- இரண்டு வீட்டிலும் தொல்லை- இருவரும் கட்டாயப் படுத்துகிறார்கள் - என்னுடைய குடும்ப மானத்தைக் காப்பாற்றுங்கள்'' என்று கெஞ்சுகிறார்.**

தலைவர் கண்ணீர் விட்டுத் தவிப்பதைக் கண்ட பகுதிச் செயலாளர்கள் தடுமாறுகிறார்கள்.

**விழியில் நீர் பெருக்கி விம்பியழுது வீட்டுச் சிக்கலைக்காட்டி ஒரு தலைவன் கட்சித் தேர்தலில் தலையிடுவது நாகரிகமான செயலா?**

இரு குடும்பங்களின் பினாமிப் பிள்ளைக்காக— நேரடியாகத் தலையிட்டு நியாயமான—ஜனநாயகத் தேர்தல் நெறிமுறைகட்குச் சாவுமணியடிக்கும் தலைவனை எங்காவது நாடு கண்டிருக்கிறதா?

கருணாநிதிக்குள்ள சங்கடங்கள் நமக்குப் புரிகிறது.

பாலு தோற்றிருந்தால் பினாமி-'கந்தசாமிப்' பாதையைத் தேர்ந்தெடுத்து உரிமையாளராக மாறிவிடக்கூடும் என்கிற சந்தேகம் வந்திருக்கக் கூடும்.

சீதாபதி தோற்றதால் அந்தத் தொல்லை இல்லை!

போகட்டும்—போன முறை சீதாபதி அணி வெற்றி பெற்றபோது கருணாநிதியின் பிள்ளை ஸ்டாலின் எதிர் அணியிலிருந்தாலும் அவரைப் பெருநோக்கோடு செயற்குழு உறுப்பினராகச் சீதாபதியும் அவரது அணியும் ஏற்றுக் கொண்டது.

**இந்த முறை சீதாபதி அணியிலுள்ள என். வி. என். சோமுவை செயற்குழு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கும உள்ளம், கருணாநிதியின் கொத்தடிமைக் கூட்டத்திற்கு இல்லையே - அவாது மருமகன் தானே வெற்றிபெற முடிகிறது.**

போன முறை மகன்—இந்த முறை மருமகன்! யாரும் சிரித்து விடாதீர்கள்!!

'தன்பெண்டு, தன்பிள்ளை, தன் வீடு என்னும் உணர்ச்சிகளுக்குச் சொந்தக்காரன் கடுகைவிடச் சின்ன உள்ளம் கொண்டவன்' என்று பாடினார், புரட்சிக்கவிஞர்—அந்தப் பாடல் வரிகளுக்குப் பொருத்தமான மனிதர் கருணாநிதி என்பதை நிருபிக்க வேறு என்ன ஆதாரம் வேண்டும்?

கருணாநிதி ஒரு தன்னலப்பூசாரி—கடைந்தெடுத்த சுயநலமி என்பதை இந்த அளவு தெளிவாக உணர்ந்த பின்னும் நியாய உணர்வுள்ள நண்பர்கள் கைகொட்டி வாய்பொத்திக் கண்ணீர் விட்டபடி அங்கே இருக்க வேண்டுமா?

தன்னலத்தைச் சுட்டெரித்து, இந்தத் தமிழ் நிலத்தை வாழவைக்கும் அன்னை மனம் கொண்ட புரட்சித்தலைவர் பொன்மனதோடு அழைக்கிறார் அருமை நண்பர்களே வாருங்கள்!

'ஆறு பிள்ளைகள்—மூன்று வீடுகள்' — இவைகளின் வளர்ச்சியும் வாழ்வும்தான் அந்த மனிதனின் இலட்சியம் என்று தெரிந்து கொண்ட பிறகு ஆத்திரமும், வேதனையும் கொண்டு தவிக்கும் திராவிட இயக்க நண்பர்களே — அண்ணாவின் கொள்கைகளைக் கண்ணாகக்காக்கும் தலைவரின் அணிநாடி வாருங்கள்!

சத்துணவு இல்லாததால்

# ஆண்டுக்கு 5 லட்சம் குழந்தைகள் பார்வை இழப்பு

**வாஷிங்டன், நவ. 24. போதுமான சத்துணவு இல்லாததால் ஆண்டுக்கு 5 லட்சம குழந்தைகள் பார்வை இழப்பதாக சாவதேச தொணடு நிறுவனத்தின் ஆய்வுச் செய்தி ஒன்று கூறுகிறது.**

பிரபல சமூக சேவகர் ஹெலன்கெல்லர் பெயரில் அமைந்த இந்த சேவை நிறுவனம் காதுகேளாதோர், பார்வையிழந்தவர்களுக்காக பாடுபட்டு வருகிறது. இந்த அமைப்பின் ஆய்வறிக்கையில் இந்த தகவல் வெளியிடப்பட்டுள்ளன.

போதுமான சத்துணவு இல்லாததால் ஆண்டுக்கு 5 லட்சம் குழநதைகள் பார்வை இழக்கின்றனர்.

பெரும்பாலும் கிராமப்புறங்களில் வாழும் மக்களின் குழந்தைகளுக்கு போதுமான சத்துணவு இல்லாததால் பாதிக்கப்படுவதாகவும் அவர்கள் போதுமான சிகிச்சை இல்லாமல் இருப்பதாகவும் இந்த ஆய்வு அறிக்கை கூறியுள்ளது.

## சத்துணவின் அவசியம்

ஆண்டுக்கு ஒரு கோடி குழந்தைகள் போதுமான சத்துணவு இல்லாதால் கண் நோய்சம்பந்தமாக பாதிப்புக்கு ஆளாகி வருவதாகவும் அந்த ஆய்வறிக்கை கூறுகிறது.

இந்தப் போக்கை தடுத்து நிறுத்தி சத்துணவின் முக்கியத்துவத்தைஎடுத்துக் கூறிமக்களிடையே போதுமான விழிப்புணர்ச்சியை உண்டாக்க முயலப் போவதாக இந்த அமைப்பின் தலைவர் ஜான் குரோலி நிருபர்களிடம் கூறினார்.

# 30ந்தேதி காந்தி சினிமா வெளியீடு

புதுடெல்லி, நவ, 24— கோடிக்கணக்கான ரூபாய் செலவில் தயாரிக்கப்பட்டுள்ள 'காந்தி' சினிமா படம் வருகிற 30-ந்தேதி திரையிடப்படுகிறது.

டெல்லியில் இப்படத்தை ஜனாதிபதி ஜைல்சிங் தொடங்கி வைக்கிறார்.

ரிச்சர்ட் ஆட்டின்பரோ என்ற ஆங்கிலேயர் தயாரித்துள்ள இப்படத்தை பார்க்க அமெரிக்காவில் இருந்து மார்ட்டின்லூதர் கிங்கின் மனைவி கோரெட்டாகிங் வருகிறார்.

அமெரிக்கா மற்றும் இங்கிலாந்து ஆகிய நாடுகளில் இப்படம் பின்னர் வெளியிடப்படுகிறது.

# பாண்டிச்சேரி தி. மு. க. ஆட்சியில் ஒரு நீதிபதி பட்டபாடு

**சென்னை, நவ. 24. பாண்டிச்சேரியில் ஆட்சி நடத்தும் தி. மு. க. அரசு ஒரு நீதிபதியை படாதபாடுபடுத்தி வைத்திருக்கிறது. விசாரணை அறிக்கையைப் படிக்காமலேயே தண்டனை அளித்துள்ளது.**

புதுவை தி.மு.க. ஆட்சிக்கு சென்னை உயர்நீதி மன்றம் புத்திமதியும் கூறியுள்ளது.

தி. மு. க. ஆட்சியின் அக்கிரம நடவடிக்கைகளுக்குப்பலியான நீதிபதியின் பெயர் ஆர். கோவிந்தராஜுலு. இவர் புதுவையில் இளநிலை நீதிபதியாகப் பணியாற்றியவர்.

இவர் மீது சில குற்றச் சாட்டுக்களை தனியார் ஒருவர் சுமத்தினார். குற்றச்சாட்டை சொன்னவர் ஒரு பஸ் அதிபர். அவரது பெயர் மாணிக்கவாசகம்.

அவர் இந்தக் குற்றச் சாட்டு பற்றி சென்னை உயர்நீதி மன்ற தலைமை நீதிபதிக்கும் புதுவை முதல்வருக்கும், கவர்னருக்கும் மனு கொடுத்திருந்தார்.

அநத மனுவை உயர் நீதிமன்றம் பரிசீலனை செய்த பிறகு நடவடிக்கை எடுக்கும்படி புதுவை அரசிற்கு உயர் நீதிமன்றம் உத்திர விட்டது.

## அடுக்கடுக்காக கொடுமை

ஆனால் புதுவை அரசு அந்த ஜட்ஜை படாதபாடு படுத்தத் தொடங்கியது.

அவர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப் படுவதற்கு முன்பாக அவரை பாண்டிச்சேரியில் இருந்து காரைக் காலுக்கு மாற்றினார்கள்.

மாற்றல் உத்தரவுவந்ததும் அந்த ஜட்ஜ் காரைக் கால் சென்று பதவி ஏற்றார்.

பதவி ஏற்ற மறுநாள் அவரை புதுவை திமுக அரசு தற்காலிக வேலை நீக்கம் செய்தது.

அதோடு சென்றுவிடவில்லை. காரைக்காலை விட்டு அவர் வெளியிடங்களுக்கு செல்லக் கூடாது என்று ஒரு தடை உத்திரவையும் பிறப்பித்தது.

ஆனால் அந்த ஜட்ஜ் அரசின் அனுமதி கிடைப்பதற்கு முன்பாக காரைக் காலை விட்டு புறப்பட்டு புதுவை வந்து தங்கினார்.

இதற்கிடையில்புதுவை அரசின் நீதித்துறை தலைமை நீதிபதி இவர் மீது சாடடப்பட்ட குற்றச்சாட்டுக்கள் பற்றி விசாரித்தார்.

5 குற்றச் சாட்டுக்களில் 3 நிருபிக்கப்பட்டதாக அவர் அறிக்கை தந்தார்.

அந்த அறிக்கையின் அடிப்படையில் நீதிபதி கோவிந்தராஜுலு குற்றவாளி என்று கூறி அவரது ஆண்டு ஊதிய உயர்வு இரண்டை புதுவை அரசு நிறுத்தி வைத்தது.

## தி.மு.க. அரசின் உத்தரவு தள்ளுபடி

புதுவை தி.மு.கஅரசின் இந்த உத்திரவைஎதிர்த்து நீதிபதிகோவிந்தராஜுலு சென்னை உயர் நீதி மன்றத்திற்கு அப்பில் செய்தார்.

உயர்நீதிமன்ற நீதிபதி ஜி. ராமானுஜம் விசாரணைச் செய்து தீர்ப்பளித்தார்.

விசாரணை அதிகாரியின் அறிக்கையைப் படித்து சிந்தித்து புதுவைஅரசு செயல்படாமல் ஊதியக் குறைப்பு தண்டனையை அளித்து இருக்கிறது'' என்று கருத்து தெரிவித்து தி.மு.க. அரசின் ஆணையை தள்ளுபடி செய்தார்.

மறுபடியும் விசாரணை அதிகாரியின் அறிக்கையைப் படித்து சிந்தித்து செயல்பட்டு புதிய உத்திரவு பிறப்பிக்கலாம என்றும் நீதிபதி ராமானுஜம் தீர்ப்பில் கூறியுள்ளார்.

பிற்படுத்தப்பட்டோர் அலுவலர்

## மேம்பாட்டுக் கழகம்: எஸ். டி. எஸ். துவக்கி வைக்கிறார்

சென்னை, நவ. 24— தமிழ்நாடு பிற்பட்டோர் அலுவலர் மேம்பாட்டுக் கழகத்தை அமைச்சர் எஸ். டி. எஸ். 25 ம்தேதி மாலை 5—30 மணிக்குத் தொடங்கி வைக்கிறார்.

தேவநேயப் பாவாணர் மத்திய நூலகக் கட்டிடத்தில் துவக்க விழா நடைபெறுகிறது.

சீர்காழி கோவிந்த ராஜன் வாழ்த்துப்பண் பாட பழனியப்பன் தலைமை வகிப்பார்.

அமைச்சர் அரங்கநாயகம், புலவர்புலமைப் பித்தன் ஆகியோர் சிறப்புரை ஆற்றுவார்கள்.

சேப்பாக்கம்

## குடிசைப் பகுதிகளை வாரியத் தலைவர் சுலோசனாசம்பத் பார்வையிட்டார்

சென்னை, நவ. 24— சேப்பாக்கம் பகுதியில் உள்ள லார்ட் கோவிந்த தாஸ் நகர் குடிசைப் பகுதிகளை குடிசை மாற்று வாரியத்தலைவர் சுலோசனாசமபத் பார்வையிட்டார்.

சுலோசனாசம்பத் துடன் வாரிய உறுப்பினர் வி. ராஜ்குமார், சேப்பாக்கம் தொகுதி கழகச் செயலாளர் மு. அன்புத்தம்பி, 91, 93-வது வட்டச் செயலாளர்கள், அதிகாரிகள் சென்றனர்.

அப்பகுதி மக்களின் குறைகளை சுலோசனா சம்பத் கேட்டறிந்தார்.

## மோட்டார் சைக்கிள்-லாரி மோதி 2 பேர் சாவு

செங்கல்பட்டு, நவ. 24- மதுராந்தகத்தில் நேற்று நடந்த விபத்தில் 2 பேர் இறந்தனர். அவர்கள் வந்த மோட்டார் சைக்கிளும் சர்க்கரை மூட்டைகள் ஏற்றிய லாரியும் மோதிக் கொண்டதால் இந்த விபத்து நேரிட்டது.

மோட்டார் சைக்கிளில் சென்ற 2 பேரும் சென்னையிலிருந்து கடலூர் நோக்கிப்போய்க் கொண்டிருந்த போது இந்த விபத்துநேரிட்டது.

விபத்தையொட்டி லாரி டிரைவர் கைது செய்யப் பட்டார்.

# கர்நாடக விவசாயிகள் மீது துப்பாக்கிச் சூடு: இருவர் பரிதாப மரணம்

**பெங்களூர், நவ. 24- கர்நாடகத்தில் நெல், கரும்பு விலைகளை உயர்த்த வேண்டும் என்று கோரி போராட்டம் நடத்திய விவசாயிகள் மீது போலீசார் கண்ணீர் புகைகுண்டுகளை வீசி துப்பாக்கி சூடு நடத்தினர். இதில் இரண்டு விவசாயிகள் குண்டு பாய்ந்து அந்த இடத்திலேயே மரணமடைந்தனர்.**

கர்நாடக மாநிலத்தில் நெல், கரும்பு விலைகளை உயர்த்தவேண்டும் என்று கோரிவிவசாயிகள்கடந்த வாரம் முதல் போராட்டம் நடத்திவருகின்றனர். இதில் விவசாய சங்கத் தலைவர்கள் சிலர் போலீசாரால் கைது செய்யப் பட்டனர். அவர்களைவிடுதலை செய்யக் கோரி விவசாயிகள் தொடர்ந்து போராட்டம் நடத்தி வநதனர்.

சம்பவத்தன்று போலீஸ் சூப்பிரண்டும். மற்றும் சில உயர் போலீஸ் அதிகாரிகளும் மண்டயம்—மத்தூர் ரோட்டில் காரில் போய் கொண்டிருந்தனர் அப்போது அச்சாலையை விவசாயிகள் கற்கள், பாறாங்கற்களை போட்டு தடை செய்திருந்தனர்.

உடனே அந்த போலீஸ் அதிகாரிகள் காரைவிட்டு இறங்கி அந்த தடையை அகற்ற முயன்றனர். அப்போது விவசாய கும்பல் ஒன்று வந்து அதைத் தடுத்தது.

விவசாயிகள் கும்பலை கலைக்க போலீசார் தடியடி நடத்தி கண்ணீர் புகை குண்டுகளை வீசினர். விவசாயிகள் தொடர்ந்து போலீசார் மீது கல்வீச்சில் ஈடுபட்டனர்.

## துப்பாக்கி சூட்டிற்கு இரண்டு பேர் பலி

இந்தத் தாக்குதலை சமாளிக்க போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தனர். இதில் இரண்டு விவசாயிகள் அந்த இடத்திலேயே குண்டு பாய்ந்து மரணமடைந்தனர்.

விவசாயிகள் நடத்திய கல்வீச்சில் ஒரு போலீஸ் சூப்பிரண்ட் உட்பட 17 போலீசார் படுகாயமடைந்தனர். பலர் கல்வீச்சில் காயமடைந்து மயங்கி விழுந்தனர். அவர்கள் அனைவரும் உடனடியாக ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டனர்.

இதனால் அப்பகுதியில் இரண்டு மணி நேரம் போக்குவரத்து பாதிக்கப் பட்டது.

சம்பவம் நடந்த இடத்திற்கு கர்நாடக மாநில போலீஸ் டைரக்டர் ஜெனரல் கே. வி. கே. ராஜா போலீஸ் படையுடன் சென்று விசாரணைநடத்தினார், அப்பகுதியில் பலத்த போலீஸ் பாதுகாப்பு போடப்பட்டுள்ளது.

ஆசிய விளையாட்டுப் போட்டி:

## இந்தியாவுக்கு ஜப்பான் படகுகளை அளிக்கிறது

புதுடெல்லி, நவ. 24— டெல்லியில் நடைபெறும் ஆசிய விளையாட்டுப் போட்டிகளில்படகுபோட்டியில் கலந்துகொள்ள ஜப்பான் விளையாட்டு வீரர்கள் படகுகளுடன் வந்துள்ளனர்.

போட்டி முடிந்த பிறகு அந்தப்படகுகளைஇந்தியாவுக்கு அன்பளிப்பாகக் கொடுக்க ஜப்பான் முடிவு செய்துள்ளது.

இதுபற்றி ஜப்பான் அணித்தலைவர் சகாகி நிருபர்களிடம் கூறுகையில், 'எங்கள் நல்லெண்ணத்தின் அறிகுறியாகவும் விளையாட்டுத் துறையை ஊக்குவிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடும் எங்கள் படகுகளை இந்தியாவுக்கு அளிக்கிறோம்' என்றார்.

போலி பர்மிட்டுகள் மூலம்

## கடத்தல்: ரூ. 9லட்சம் அரிசி, நெல் பறிமுதல்

கோவை, நவ. 24— கேரளத்திற்கு கடத்தி செல்லப்பட்ட 9 லட்ச ரூபாய் மதிப்புள்ள நெல், அரிசி மூட்டைகளை சிவில்சப்ளை அதிகாரிகள் பறிமுதல் செய்தனர்.

பொள்ளாச்சி கேரளா சுங்கச் சாவடிகளில் மொத்தம் 42 லாரிகளை அதிகாரிகள் மடக்கி சோதனையிட்டனர். அவர்கள் போலி பர்மிட்டுகளை வைத்துக் கொண்டு கேரளாவிற்கு அரிசி கடத்த முயன்றது தெரியவந்தது. அந்த லாரிகளிலிருந்து 9 லட்ச ரூபாய் மதிப்புள்ள நெல், அரிசி மூட்டைகளை அதிகாரிகள் கைப்பற்றினர் இத்தகவலை கோவை மாவட்ட கலெக்டர் மலைச்சாமி நிருபர்களிடம் தெரிவித்தார்.

## பல்லவன் நடத்துனர் நேர்மைக்கு பரிசு

சென்னை, நவ. 24— பல்லவன் பஸ் ஒன்றில் கிடந்த நகைப் பெட்டி ஒன்றை அந்த பஸ்சின் கண்டக்டர் எடுத்து மக்கள்தொடர்பு அதிகாரியிடம்ஒப்படைத்தார். அதில் இருந்த நகை மதிப்பு ரூ.5 ஆயிரம்.

56 எச் பஸ்சில் பணிபுரியும்கண்டக்டர் ஜி. சீனிவாசன் கடந்தமாதம் 28ந்தேதிஅந்தபஸ்சில்ஒரு லேடிஸ் ஹாண்ட்பேக் இருப்பதைப் பார்த்தார். அதில் 2 சிறிய தங்க செயின், ஒரு மோதிரம் (ரூ. 5ஆயிரம் மதிப்பு இருக்கும்) இதுதவிர ரூ.75 இருப்பதை பார்த்தார். அதை மக்கள் தொடர்பு அதிகாரியிடம் ஒப்படைத்தார்.

இந்த நகைகள் செயிண்ட் ஹியூபர்ட் என்பவருடையது என்று பிறகு கண்டுபிடிக்கப் பட்டது.

கண்டக்டரது நேர்மையைப் பாராட்டி அந்த அம்மையார் ரூ. 200 வெகுமதி அளித்தார்.

## ஸ்ரீபெரும்புதூர் கழக பொதுக் கூட்டம்

ஸ்ரீபெரும்புதூர், நவ. 24 — ஸ்ரீபெரும்புதூர் பஸ்நிலையம் அருகில் இன்று (24-ந்தேதி) மாலை 6 மணிக்கு வெள்ளையன் தலைமையில் கழகக் கூட்டம் நடக்கிறது.

கூட்டத்தில் பிள்ளைப் பாக்கம் கே. மூர்த்தி; வி. மாரிமுத்து, போந்தூர் மணி, குமார வடிவேலு, முனுசாமி, ஆறுமுகம், ஆதிகேசவன், சந்தானம், பூபதி, கோதண்டராமன் புவனகிரிசேகர், நடராசன் மற்றும் பலர் பேசுகின்றனர்.



## அமைச்சர் ராஜாமுகமது நிகழ்ச்சிகள்

நவ. 26-ந்தேதி காலை 6.10 மணி கொடை ரோடு, 10 மணி கொடைக்கானல். 27-ந்தேதி காலை கொடைக்கானலில் மதுரை மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கி கிளை கட்டிடத்திறப்பு, இரவு ஈரோடு, 28-ந் தேதி அமைச்சர் முத்துசாமி இல்லத் திருமணம் 29,30 மற்றும் டிச. 1-ந் தேதி கொடைக்கானல்.

## துறைமுகபகுதி 51-வது வட்ட கழக கூட்டம்

சென்னை, நவ. 24— துறைமுகப்பகுதி 51-வது வட்டத்தில் தாதா முத்தியப்பன் தெரு ஆச்சாரப்பன் தெரு சந்திப்பில் 25-ந்தேதி மாலை 7 மணிக்கு கருணாநிதி தலைமையில் கழக பொதுக்கூட்டம் நடைபெறுகிறது.

கூட்டத்தில் கோடம்பாக்கம் குமார், மதுசூதனன், ஏ.வி. கிருஷ்ணமூர்த்தி, கு. கஜேந்திரபாபு, எம்.பி.ஆனந்தன், என். ஏ. துரை, ராஜேந்திரன், கே. எல்லப்பன், நா. யுவராஜ். ராமச்சந்திரன், குமார், சேகர். கணேசன் மற்றும் பலர் பேசுகின்றனர்.

## திருமணம்

ஆனைமலை ராஜிக்கண்ணு மகன் வி. கோவிந்தராஜுவுக்கும் பழனி ஜோதிமணியின் சகோதரி சந்தானலட்சுமிக்கும் வரும் 28-ந் தேதி காலை 11 மணிக்கு அமைச்சர் ஆர்.எம்.வீ. தலைமையில் பழனி அடிவாரம் அருள்ஜோதி வீதியிலுள்ள டி.கே.பி. தங்கம் பொன்னுசாமி கல்யாண மகாலில் திருமணம் நடக்கிறது.

மேலும் பல பதக்கங்களை பெற வாய்ப்பு:

# ஆசிய விளையாட்டில் இந்திய வீரர்கள் முன்னணி

## துப்பாக்கிச் சுடும் போட்டியில் வெள்ளிப் பதக்கம் கிடைத்தது

**புதுடெல்லி நவ 24 ஆசியவிளையாட்டுப் போட்டிகளில் இதுவரை 5 பதக்கங்களைப் பெற்றுள்ள இந்தியா மேலும் பல போட்டிகளில் முன்னணியில் உள்ளது**

துப்பாக்கிச் சூடும் போட்டியில் இந்தியாவுக்கு வெள்ளிப்பதக்கம் கிடைத்தது.

டெல்லியில் நடைபெறும் 9-வது ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் இந்தியா இதுவரை 5 பதக்கங்களைப் பெற்றுள்ளது.

குதிரைச்சவாரிப்போட்டியில்இந்தியாவுக்கு 2 தங்கப் பதக்கங்கள் கிடைத்தன. இதே போட்டியில் வெள்ளிப் பதக்கம், மற்றும் தங்கப் பதக்கமும் இந்தியாவுக்குக் கிடைத்துள்ளது.

துப்பாக்கிச் சுடும் போட்டியில் இந்தியாவுக்கு வெள்ளிப் பதக்கம் கிடைத்துள்ளது.

சீனா 532 பாயிண்ட் எடுத்து தங்கப் பதக்கத்தைப் பெற்றது.

இந்திய அணியைச் சேர்ந்த ரண்தீர் சிங் சிறப்பாகசுட்டு வெள்ளிப் பதக்கம் பெற வழி செய்தார்.

இந்தப் போட்டிகளைத் தவிர மேலும் பல போட்டிகளில் இந்தியா பதக்கங்களை பெறும்வாய்ப்பு உள்ளது.

### டென்னிஸ்

ஆண்களுக்கான டென்னிஸ்போட்டியில்இந்தியா பைனலை எட்டியது.

இந்தோனேசியாவை எதிர்த்து இந்தியா இறுதிப் போட்டியில் விளையாடும்.

அரை— இறுதி ஆட்டத்தில் சீனாவை எதிர்த்து விளையாடிய இந்தியா, (2-0 என்ற ஆட்டக்கணக்கில் சீனாவைத் தோற்கடித்தது.

முதல் ஒன்றையர் ஆட்டத்தில் இந்திய அணியின் வாசுதேவன், சீனாவின்யுவோயுணியை (6-1,)(6-3,) என்றகணக்கில் தோற்கடித்தார்.

### தண்ணீர் போலோ

நீச்சல்குளத்தில்,விளையாடும் நீர் போலோ விளையாட்டில் அரை இறுதி ஆட்டத்தில் ஆடும் தகுதியை இந்தியா பெற்றது.

சீனா, ஜப்பான், சிங்கப்பூர் ஆகிய நாடுகளும் அரை - இறுதி ஆட்டத்தில் ஆடும் தகுதியை அடைந்துள்ளன.

1951-ம் ஆண்டில் இந்தியா இந்தப் போட்டியில் தங்கப்பதக்கத்தைப் பெற்றது.

பிறகு 19 ஆண்டுகளுக்கு பிறகு பாங்காககில் நடந்த போட்டியில் இந்தியா வெள்ளிப் பதக்கத்தைப் பெற்றது.

இந்த விளையாட்டில் இந்தியா அரை-இறுதிப் போட்டியில் விளையாட தகுதி பெறுவது இது 3-வது தடவையாகும்.

### கால்ப்

கால்ப் போட்டியில் இந்திய அணி தங்கப் பதக்கத்தை பெறும் என எதிர்பார்க்கப்படுகிறது.

இதில் இறுதிச் சுற்று போட்டி நடைபெற வேண்டியுள்ளது.

### கைப்பந்து

ஆண்களுக்கான வாலிபால் போட்டியில் இந்தியா இந்தோனேசியாவைத் தோற்கடித்தது.

### ஆக்கி

ஆண்களுக்கான ஆக்கி 'பி' பிரிவு போட்டியில் இந்தியா வங்க தேசத்தை தோற்கடித்தது.

இந்திய அணியினர் துவக்கம் முதல் விறுவிறுப்பாக விளையாடி 12 கோல்களை போட்டனர்.

இந்திய அணியைச் சேர்ந்த ஷாகித் சரமாரியாக 5 கோல்களைப் போட்டார்.

அனித்குமார் அடுத்தடுத்து 3 கோல்கள் போட்டு 'ஹாட்டிரீக்' அடித்தார்.

இதுவரை 3 போட்டிகளில் பங்கேற்ற இந்திய ஆக்கி மூன்றிலும் வெற்றி பெற்றுள்ளது.

ஏமன் அணியோடு இனி இந்திய அணி விளையாடும்.

### டேபிள் டென்னிஸ்

டேபிள் டென்னிஸ் போட்டியில்கால்-இறுதிப் போட்டியில் விளையாட இந்திய பெண்கள் இந்துபூரியும் சைலஜாவும் தகுதி பெற்றனர்.

ஆண்கள் ஒற்றையர்

(5-ம் பத்தி பார்க்க)

(3-ம் பத்தி தொடர்ச்சி)

2-ம் சுற்றில் விளையாட இந்தியாவின் சந்திரசேகர், மன்மீத்சிங் ஆகியோர் தகுதி பெற்றனர்.

### சீனப் பெண் சாதனை

பார் விளையாட்டில் நேற்று முன்தினம், நூலிழையில் தங்கப் பதக்கத்தைப் பெறத் தவறிய சீனப் பெண் ஊஜியானி ஒரே நாளில் 2 தங்கப்பதக்கங்களைப் பெற்று சாதனை புரிந்தார்.

அதோடு இந்தப்பெண் மற்றொரு பார் விளையாட்டுப் பிரிவில் வெள்ளிப் பதக்கத்தையும் பெற்றார்.

16 வயதான ஊஜியானி அற்புதமாக பார் விளையாடி ஆயிரக்கணக்கான ரசிகர்களின் பாராட்டைப் பெற்றார்.

பார் விளையாட்டில் மட்டும் சீனாவுக்கு 7 தங்கப்பதக்கங்கள் கிடைத்துள்ளது.

### ஜப்பான்

பதக்கப்பட்டியலில் முதலிடத்தைப் பெற கடுமையாக போட்டியிடும் ஜப்பான்நாடு நீச்சல் போட்டியில் மட்டும் 10 தங்கப் பதக்கங்களைத் தட்டிச் சென்றது.

நீச்சல் போட்டியில் பங்கேற்ற ஜப்பானிய ஆண்களும் பெண்களும் வில்லில் இருந்து அம்பு சீறிப் பாய்வது போல நீந்திச் சென்றனர்.

தொடர்ந்து 6-வது நாளாக இன்றும் பல்வேறு பந்தயங்கள் நடக்கின்றன.

முதலமைச்சர் குழந்தைகள்

# சத்துணவு திட்ட மையங்கள் அதிகரிப்பு

**சென்னை, நவ. 24. முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்ட மையங்கள் அதிகரிக்கப்பட்டுள்ளன. புதிதாக 1190 மையங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன**

மதிய சத்துணவுத் திட்டத்தை கல்வித் துறையினரும், சமூக நலத்துறையினரும் அமல்படுத்தி வருவது தெரிந்ததே.

தமிழகத்தில் சத்துணவு திட்டத்தை 2 வயது முதல் 4 வயது வரை உள்ள குழந்தைகளுக்கு சமூக நலத்துறை செயல்படுத்தி வருகிறது.

5 வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு சத்துணவை வழங்கும் பொறுப்பை கல்வித்துறை ஏற்றுள்ளது.

லட்சக்கணக்கான குழந்தைகளுக்கு சத்துணவு வழங்க ஆயிரக்கணக்கான மையங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

இப்போது 1190 புதிய மையங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இதையும் சேர்த்து மொத்தம் 2? ஆயிரத்து 361 மையங்களாக உயர்ந்துள்ளன.

திருவண்ணாமலை அருகே

## சரக்கு ரயில் தடம்புரண்டது

திருச்சி. நவ. 24—காட்பாடியிலிருந்து விழுப்புரம் சென்ற சரக்கு ரயில் ஒன்று திருவண்ணாமலை தண்டரை? குறிஞ்சிபுரம் இடையே விபத்துக்குள்ளானது. ஒரு பாலத்தின் மீது அந்த சரக்கு ரெயில் சென்றுக்கொண்டிருந்தபோது 5 பெட்டிகள் பாலத்திலிருந்து கீழேவிழுந்தது மேலும் 5 பெட்டிகள் தடம் புரண்டன. இதனால் இப்பகுதியில் ரயில் போக்குவரத்து பாதிக்கப்பட்டது. இதில் யாரும் காயமடையவில்லை. இது குறித்து விசாரணை நடந்து வருகிறது.

## ஆற்றில் மூழ்கிய பெண்களை காப்பாற்றிய போலீஸ்

கிருஷ்ணகிரி, நவ. 24— கிருஷ்ணகிரி சோமார் பேட்டை ஏரியில் கோவிந்தாச்சாரி என்பவரின் மகள் விஜயா (வயது 10 துணிதுவைத்துக் கொண்டிருந்தாள். அப்போது அவள் கால் தவறி ஆற்றில் விழுந்து விட்டாள.

அவளை காப்பாற்ற பக்கத்தில் துணி துவைத்துக் கொண்டிருந்த ராஜம்மாள் ஆற்றில் இறங்கினாள். அவரும் தண்ணீரில் மூழ்கி விட்டார். இருவரும் தண்ணீரில் மூழ்கி தத்தளித்துக் கொண்டிருக்கும் போது அவ்வழியே வந்தபோலீஸ்காரர் உமர்அலி உடனே ஆற்றில் குதித்து இரண்டு பேரையும் காப்பாற்றி கரை சேர்த்தார்.

## காரைக்குடி தி. மு. க. வினர் கழகத்தில் இணைந்தனர்

காரைக்குடி, நவ. 24— காரைக்குடி பாண்டியன் போக்குவரத்து கழகத்தைச் சேர்ந்த தி. மு. க. வினர் கழக எம்.பி. அன்பழகன் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

அப்போது பரமக்குடி தவசி எம்.எல்.ஏ., காளிதாஸ், ராஜேந்திரன், மெய்யப்டன், ராமமூர்த்தி, நாசிங்கம் ஆகியோர் உடனிருந்தனர்.

கர்நாடக மாநிலத்தில்

# 19 எதிர்க்கட்சி எம்.எல்.ஏக்கள் சஸ்பெண்ட்

**பெங்களூர், நவ. 24. கர்நாடக சட்ட சபையில் தர்ணா செய்து இடைஞ்சல் செய்த எதிர்க்கட்சி எம் எல் ஏக்கள் 19 பேர் ஒரு நாள் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனர்.**

கூச்சல் குழப்பம் ஏற்படவே சபை மும்முறை ஒத்தி வைக்கப்பட்டது.

ஜனதா, கிராந்தி ரங்கா. இந்திய கம்யூனிஸ்ட் ஆகியகட்சிகளைச சேர்ந்த எம். எல். ஏக்களின் 5 அம்சக் கோரிக்கையை அரசு நிராகரித்ததற்கு ஆட்சேபம் தெரிவித்தனர்.

எதிர்க்கட்சித் தலைவர் லட்சுமிசாகர் தலைமையில் இவர்கள் சபையில் அமர்ந்து மறியல் செய்தனர்.

அதற்கு முன்பு பாரதிய ஜனதாவினர் இதே பிரச்னை மீது வெளி நடப்பு செய்தனர்.

துணை சபாநாயகர் பாடிராஷ்ஹல்சர்க்கர் பல முறை அமைதி காக்கும் படி வேண்டுகோள் விடுத்தார்.

### கூச்சல் குழப்பம்

கூச்சல் குழப்பம் தொடர்ந்து நீடிக்கவே சபை மும்முறை ஒத்தி வைக்கப்பட்டது.

3-வது தடவை ஒத்தி வைக்கப்பட்ட பிறகும் சபை கூடியபோது எதிர்க்கட்சியினர் தொடர்ந்து மறியல் செய்தனர்.

தொடர்ந்து மறியல் செய்தால் அவர்களது பெயர்களைக் குறிப்பிட வேண்டி இருக்கும என்று துணை சபாநாயகர் எச்சரிக்கை செய்தார்.

இதுபயன் அளிக்காமல் போகவே எதிர்க்கட்சியைச் சேர்ந்த 19 எம். எல். ஏக்களையும் ஒரு நாள் முழுவதும் சஸ்பெண்ட் செய்திருப்பதாக அறிவிக்கப்பட்டது.

சபை காவலர்களிடம் இவர்களை வெளியேற்றுமாறு உத்தரவிட்டார்.

அவர்கள் வெளியே செல்லும்போது அரசுக்கு எதிராக கோஷமிட்டவாறு சென்றனர்.

பின் தங்கியவர்கள் முன்னேற்றம் பெற

# முதல்வர்புரட்சித்தலைவர் தெரிவித்த திட்டம்: சீனம்செயல்படுத்துகிறது

## கழக எம். பி. ராமகிருஷ்ணன் தகவல்

**சென்னை. நவ 24- பின்தங்கியவர்களையும். நலிவுற்றவர்களையும் முன்னேற்றம் பெற வைக்க முதல்வர் புரட்சித் தலைவர் வெளியிட்ட திட்டம் சீனாவில் செயல்படுத்தப் படுகிறது என்று கழக எம். பி ராமகிருஷ்ணன் கூறியுள்ளார்.**

இந்தியா-சீன நட்புறவு கழகத்தின் சார்பில் சீன நாட்டுக்கு நல்லெண்ண தூது கோஷ்டியாக இந்திய பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் பதினான்கு பேர் கொண்ட கோஷ்டி கடந்த மாதம் 19-ஆம் தேதி சீனாவுக்கு சென்றது.

இந்த நல்லெண்ணதூது கோஷ்டியின் துணைத் தலைவராக நாடாளுமன்ற கழகக் கொறடா ஆர். ராமகிருஷ்ணன் சென்றிருந்தார்.

செஞ்சீனத்தில் இரண்டு வாரகாலம் சுற்றுப் பயணம்செய்த அவர் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

பல விஷயங்களில் நாம் சீனர்களிடமிருந்து பல படிப்பினைகளைப் பெறவும் பின்பற்றவும் நல்ல வாய்ப்புள்ளது.

### விவசாயத்திற்கு முக்கியத்துவம்

விவசாயத் துறையில் விளைச்சலைப் பெருக்குவதற்காக மிகுந்த முனைப்பான நடவடிக்கைகளை அங்கு மேற்கொண்டிருக்கிறார்கள்.

இந்தியாவிலிருந்து சென்ற நாங்கள் ஒரு பெரிய நாட்டின் நல்லெண்ண தூதுக்குழுவாக சென்றதால், அங்கு எங்களுக்கு சிறந்த முறையில் வரவேற்பு அளிக்கப்பட்டது.

இருபதாம் தேதியன்று நள்ளிரவு பீகிங் போய்ச் சேர்ந்தோம். பீகிங் நகர துணை மேயர் தலைமையில் எங்களுக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது.

அன்று மதிய உணவுக்கு பிறகு பீகிங் நகரிலுள்ள தென்கிழக்கு ஆசிய நாடுகள் கலைக்கூடத்தையும் அதனுடன் இருந்த பல் கலைக்கழகத்தையும் சென்று பார்த்தோம்.

ஒரு பகுதிக்கு நாங்கள் சென்றபோது அங்குள்ள ஒருவர் சிங்களவர்கள் பேசும் தமிழில் வணக்கம் என்று சொல்லி வரவேற்றது தமிழ்நாட்டிலிருந்து சென்ற எங்களுக்குஎல்லாம்புல்லரிப்பை ஏற்படுத்தியது. "உங்களுக்கு தமிழ் தெரியுமா? நீங்கள் தமிழ்நாட்டவரா என்று கேட்டோம். "இலங்கையில் தமிழ் படித்தவன். நன்கு தமிழ் பேச தெரியும்" என்று ஒருவர் தமிழிலிலேயே எங்களுடன் உரையாடினார்.

இந்திய, சீன மக்கள் நட்புறவுக் கழகத்தின் தலைவரான வாங்-பிங்னான் இந்திய தூதுக்குழுவினருக்கு வரவேற்பு விருந்து அளித்தார்.

22-ம்தேதிமாலை சீனப் பிரதமர் ஷூஜாங்கை சந்தித்தோம். அவர் மிகுந்த பரிவோடு எங்களை வரவேற்று உரையாடினார். சீனாவுக்கும் இந்தியாவுக்கும் இடையே இன்னும் நெருங்கிய நட்புறவு ஏற்பட வேண்டும் என்று சீன மக்கள் விரும்புவதாக அவர் தெரிவித்தார்.

மறுநாள் சீனாவின் தெனகிழக்குக் கோடியான ஷாங்காய் போய்ச் சேர்ந்தோம். "பூவுலகின் சொர்க்கம்" என்று கூறப்படும் ஹாங்ஷெள என்ற இடத்தைக் கண்டோம்.

### சீனத்திலும் அண்ணாவின் திட்டம்

சீன கம்யூனிஸ்ட் கட்சியின் மேலிட அங்கத்தின ரான வாங்பாய்க் எங்களை வரவேற்று உபசரித்தார்.

பேரறிஞர் அண்ணா தமிழகத்தில் தரிசு நிலங்களை புஞ்சை தானியங்கள் விளையக்கூடிய விளைநிலங்களாக மாற்றுவதற்காக நிலப்படை என்ற ஒரு அமைப்பை உருவாக்க வேண்டும் என்ற யோசனையைத்தெரிவித்திருந்தார். இது சீனநாட்டில் செயல்படுத்தப்பட்டு வருவதை நேரில் கண்டோம்.

இரண்டு கிராமங்களுக்கு ஒரு மக்கள் படை வீதம் அமைக்கப்பட்டுள்ளது.

சீனாவில் அடிப்படைத் தொழிலாளி ஒருவருடைய குறைந்த பட்ச மாத வருமானம் இந்திய நாணயப்படி நானூறு ரூபாயாகும்.

அதிகபட்ச சம்பளம் எவ்வளவு பெரியவராக இருந்தாலும் இந்திய நாணய விகிதப்படி இரண்டாயிரம்ரூபாய்க்கு மேல் போவதில்லை.

எங்களுடைய சுற்றுப் பயணத்தின்போது அந்த நாட்டில் பலகோடி ரூபாய் மதிப்புள்ள மரகத புத்தர் சிலை ஒன்றைக் கண்டோம்.

சீன நாட்டில் வறுமை இல்லை. ஏழ்மையில்லை, நூற்றுக்கு தொண்ணூற்று ஒன்பது பேருக்கு வேலை உள்ளது, வேலையில்லா திண்டாட்டம் இல்லை. பிச்சைக்காரர்களையே காண முடியாத நிலை அங்கே உள்ளது.

பின்தங்கியவர்கள் அல்லது நலிவுற்றவர்களை அந்த நாட்டு நிர்வாகம் எப்படி முன்னேற்றுகிறது என்பதை விசாரித்துத் தெரிந்து கொண்டபோது சில ஆண்டுகளுக்கு முன்பு தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் கொண்டுவந்த திட்டம் அங்கு செயல் படுத்தப்படுவதைக் கேட்டுத் தெரிந்து கொண்டோம்.



எந்தப் பிரிவினராக இருந்தபோதிலும், அவர்களுக்கு சலுகைகளை வழங்கும்போது பொருளாதார ரீதியாக அவர்கள் பின்தங்கியநிலையில் உள்ளனரா என்பதைக் கண்டறிந்த பிறகே கல்வி சலுகையாகட்டும், இதர சலுகைகள் ஆகட்டும் உண்டு என்பதை தெளிவாக எங்களுக்கு சொன்னார்கள்.

### ஒரு குடும்பம் ஒரு குழந்தை

ஒரு குடும்பம் ஒரு குழந்தை என்பதை நெறியாக அவர்கள் கொண்டிருக்கிறார்கள். வீடு முதல் உணவு, வைத்திய வசதி, சாகுபடிநிலம் ஆகிய அனைத்தும் அரசாங்கக்கட்டுப்பாட்டிலுள்ளது.

குடும்பக் கட்டுப்பாட்டைப் பொறுத்தவரையில் ஒரு தம்பதிக்கு ஒரு குழந்தைதான். ஒரு குழந்தைக்குமேல் இருந்தால் அவர்களுக்கு சலுகைகள் ரத்து செய்யப்படுகின்றன.

இவ்வாறு ராமகிருஷ்ணன் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.